[10th August 1960

THE HON. SRI M. A. MANICKAVELU: அந்தத் தகவல் எனக்குத் தெரியவில்லே. இதைப் பற்றி கனம் அங்கத்தினர் குறிப்பாக ஒரு கேள்வி போட்டால் விசாரித்து பதில் சொல்லலாம்.

*Power-boring and hand-boring set*

* 63 *Q.*—SRI K. GOPALA KOUNDER: கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் ஆண்டு ஜனவரி மீ 1-ம் தேதி முதல் இன்று வரையில் அரசாங்கத்தால் வாங்கப்பட்ட

( i ) பவர் போரிங் செட்டுகள்,

( ii ) கை போரிங் செட்டுகள், எத்தனை ?

(ஆ) இவைகள் எந்தெந்த ஜில்லாவிற்கு எத்தனை கொடுக்கப்பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) (i) No power-boring sets were purchased from 1st January 1960, till date.

(ii) Eleven hand-boring sets were manufactured at the Government Industrial Engineering Workshop, Madras.

(*b*) The eleven hand-boring sets were distributed as follows :—

(1) Chingleput district—7.

(2) Tiruchirappalli district—3.

(3) Salem district—1.

SRI K. GOPALA KOUNDER: ஸார், மலைப் பிரதேசம் அதிகமாக இருக்கிற தென்னாற்காடு ஜில்லாவுக்கு எத்தனை பவர் போரிங் செட் கொடுக்கப்பட்டிருக்கிறது ? கல் உடைக்கும் இயந்திரங்கள் எத்தனை கொடுக்கப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI M. A. MANICKAVELU: இன்னும் 25 ஹாண்ட் போரிங் செட்டுகளுக்கு ஏற்பாடாகிக் கொண்டிருக்கிறது. அவை தயாரானதும் அந்தந்த ஜில்லாக்களுக்கு விநியோகிக்கப்படும்.

SRI K. GOPALA KOUNDER: மலைப் பிரதேசம் அதிகமாகவுள்ள செஞ்சி தாலுகாவுக்கு ஒரு பவர் போரிங் செட்டும், ஒரு கல் உடைக்கும் இயந்திரமும் கொடுக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: எந்தெந்தப் பகுதியில் இவை மிக அவசியமோ அதைக் கவனித்து டிப்பார்ட்மெண்டார் வழங்குவார்கள்.

10th August 1960]

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: There is shortage of power-boring sets in this State. As such may I know whether there is any proposal before the Government to produce more power-boring sets to meet the needs of agriculturists?

THE HON. SRI M. A. MANICKAVELU: There is difficulty in getting more power--boring sets. That is why Government are now manufacturing these hand-boring sets. They are much cheaper and one can get them in reasonably short time.

SRI S. LAZAR: இந்த போரிங் செட்டுகள் குடிதண்ணீர்க் கிணறுகளுக்கும் விவசாயத்திற்கும் பயன்படுகிறது. இவை இப்போதிருக்கும் அளவு போதவில்லை என்ற உண்மையை அரசாங்கம் உணர்ந்திருக்கிறதா? அதிகப்படியான ஹாண்ட் போரிங் செட்கள் வாங்கி விநியோகிக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: ஏற்கெனவே அதிகமான அளவுக்கு ஹாண்ட் போரிங் செட்களுக்கு ஏற்பாடாகியிருக்கிறது. பவர் போரிங் செட்கள் வாங்க "பாரின் எக்ஸ்சேஞ்ச்" அதிகமாக வேண்டும். போதுமான "பாரின் எக்ஸ்சேஞ்சை"ப் பெறுவதற்காக நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறோம்.

SRI C. NATARAJAN: கள்ளக்குறிச்சி வட்டார அபிவிருத்தி கவுன்சில் அந்தப் பகுதிக்கு கல் உடைக்கும் இயந்திரம் தனியாகக் கொடுக்க வேண்டுமென்று சிபாரிசு செய்திருக்கிறதா? அதன் மீது சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டார்கள்?

THE HON. SRI M. A. MANICKAVELU: இந்த மாதிரி இயந்திரங்களைச் செய்ய உள் நாட்டில் முடியவில்லை. வெளி நாட்டிலிருந்து வாங்க "பாரின் எக்ஸ்சேஞ்ச்" தேவையாக இருப்பதால் அதற்காக ஏற்பாடு செய்து கொடுக்கிறோம்.

SRI M. D. THIAGARAJA PILLAI: தலைவர் அவர்களே, ஹான்ட் போரிங் செட்களுக்கு குழாய்கள் கிடைக்காததனால் கால தாமதம் ஏற்படுகிறது. குழாய்கள் வாங்கி சப்ளை செய்ய நடவடிக்கை எடுக்கப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இந்த மாதிரியான கஷ்டங்கள் நடைமுறையில்தான் தெரிய வருகின்றன. அதைத் தெரிந்த பிறகு டிப்பார்ட்மெண்டார் எப்படி நிவர்த்திப்பது என்று நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவார்கள்.

*Repatriates from Ceylon*

* 64 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நெல்லை ஜில்லா இலங்கையிலிருந்து கடல் கடந்து தாயகம் திரும்பியோர் சங்கத்தின் சார்பில் 1959-ம் ஆண்டு செப்டம்பர் மீ 22உ, 1960-ம் ஆண்டு மார்ச் மீ 18-ம் தேதியில்